# ஆறை அழகப்ப முதலியார் சரித்திரம்

# ஆறை அழகப்ப முதலியார் சரித்திரம்

தொண்டைமண்டல நாட்டில் ஆற்றாரென்னும் ஆறைமா நகரில், ஆறை அழகப்ப முதலியார் ஜன மானூர். அவர் பாட்டனூர் ஆதி அழகப்ப முதலியா அவர் எனது முன்னோர்களில் முதல்முதலில் தேசா பத்ய அதிகாரஞ்செய்தவர்.

அவாது புத்திரியைப் பிந்தின அதிகாரஸ்தரா மாவைக் குமாரசுவாமி முதலியார் கலியாணஞ் செய் தார்.

ஆதி அழகப்ப முதலியார் சாலிவாகன சகாப்தம் 1557-ம் வருஷத்துக்கு இங்கிலீஷ் 1635-ம் வருஷமான கொல்லம் 810-ம் ஆண்டு முதல் 831-ம் ஆண்டுவரை இருபத்திரண்டு வருஷம் தேசாதிபதியாக அதிகாரஞ் செய்திருக்கிறூர்.

அவர் அனேக தர்மங்கள் நடத்திப் புகழ்பெற்று வந்திருப்பதாய்ப் பாரம்பரைக்கேள்விமூலமாகத் தெரிய வருகிறது. இதைத்தவிர அவருடைய சரித்திரங்கள் ஒன்றுந் தெரியவில்லை.

அவருக்குப்பின் அவருடைய புத்திரர் மயிலப்ப முதலியார் கொல்லம் 839-ம் ஆண்டில் இருந்திருப் பதாய் மட்டுந் தெரிகிறது.

அவர் அதிகாரஞ் செய்துவந்தாரென்று திட்ட
...க் கூற முடியவில்லை. அவரைப்பற்றிய வேறு
...ாச்சாரங்களும் தெரிய மார்க்கமில்லை.

அவருக்குப் புத்திரர் மூவர்: 1 குமாரசுவாமி முதலியார்; 2. ஆறை அழகப்ப முதலியார்; 3. சங்கர நாராயண முதலியார். இவர்களும் திருவம்பலத்தண்ணி யென்ற ஒரு புத்திரியு மிருந்தார்கள்.

இவர்களில் மூத்தவரான குமாரசுவாமி முதலி...ர், பாண்டியநாட்டு மன்னவரான விஜய ரெங்க ...ாக்கநாத நாயக்கர் மைனராயிருக்கும்போது அவர் ...ட்டியாரான மங்கம்மாள்--அரசி இராச்சிய பரிபால...ஞ் செய்த காலத்தில் அந்த இராச சபையில் முதல் ...ந்திரி உத்தியோகம் கொல்லம் 875-ம் ஆண்டில் ...பெற்று வேலைபார்த்து வந்திருக்கிறார்.

அவர் இவ்வளவு காலம் மந்திரி வேலை பார்த்தா ரென்று தெரியவில்லை. அவருக்குச் சந்ததியில்லை.

அவர் தம்பி ஆறை அழகப்ப முதலியார் அவருக்கு முந்தின அதிகாரஸ்தரான மாவைக் குமாரசுவாமி முதலியார் புத்திரியை விவாகஞ்செய்திருந்தார்.

அவர் மாவைக் குமாரசுவாமி முதலியார் காலஞ் சென்றவுடன் அவருடைய அதிகாரத்தை வாரீஸ் பாத்தியமாகப் பாண்டியநாட்டு அதிபதியான மங்கம்மாளரசியிடம் கொல்லம் 875-ம் ஆண்டுக்கு இங்கிலீஷ் 1700-ம் வருஷத்தில் பெற்று திருநெல்வேலிச் சீமையுடன் மதுரை திருச்சினாப்பள்ளி இம் மூன்று சமஸ்தானத்திலும் இராசரீக முதலிய சகல அதிகாரங்களை

யும் நீதியுடனும் கீர்த்தியுடனும் கொல்லம் 91 ஆண்டு (1735-ம் ஹூ) வரை செலுத்தி வந்திருக்கிரு

அப்பொழுது கொல்லம் 903-ம் ஆண்டு கீல வருஷத்தில் திருநெல்வேலிப் பக்கமிருக்கிற நயினர் குளத்தைத் தர்மமாக தென்காசி நயினர் செட்டியா ரால் வெட்டுவித்தார். இக்காரணத்தால் நயினர்குளம் என்று பேர் வழங்கிவருகிறது.

அவர் தளவாய்ப் பட்டம் பெற்று தேசப் பாது காப்பு முதலியவைகளுக்கு சேனைகளுந் தனங்களுஞ் சேகரித்து வைத்து அதிகாரஞ் செலுத்தி வந்திருக் கிருர்.

அந்தப்படி நடத்திவந்ததில் தன்னுடைய தம்பி சங்கரநாராயண முதலியாரை திருநெல்வேலி மேல் பிடாகை முள்ளி நாடான பண்ணைமாநகரமென்ற ஆழ்வார்குறிச்சியிலிருந்து தெக்ஷிணக் காரியங்களை பார்த்துவரும்படி நியமித்து, தாம் திருநெல்வேலி மதுரை திருச்சினுப்பள்ளி இம் மூன்று இடங்களுக் குஞ் சென்று இராச காரியங்கள் பார்த்து வந்தார். இவருடைய வாசஸ்தலம் மதுரையாக இருந்தது.

திருச்சினுப்பள்ளி மதுரை திருநெல்வேலி இம் மூன்று இடங்களில் தாம் வசிப்பதற்கு அரண்மனை கட்டிவைத்தார்.

தம்பி சங்கரநாராயண முதலியார் வசிப்பதற்கு ஆழ்வார்குறிச்சியில் அரண்மனை கட்டிக்கொடுத்திருக் கிருர். அதில் அவர் வாசஞ்செய்து காரியங்கள் பார்த்துவந்தார். சிவபக்தியில் சிறந்தவரானதால் சிவ

லமென்னுந் தலத்திற்கு அடிக்கடிபோய் சுவாமி தரிசனஞ்செய்து வருவார்.

அப்படி வருவதில் மேற்படி கோவில் விசாரணையைத் தாமே வகித்துப் பார்த்து நித்தியல் ஐந்துகாலப் பூசையுங் கட்டளைகளு மேற்படுத்தி நடத்தி வந்தார் அத்துடன் தமக்குச் சிவசயில மென்னும் நாமம் வைத்துக்கொண்டதினுலே அதுமுதல் அவருக்குச் சிவசயில முதலியாரென்று பேர் வழங்கியது.

அவர் சிவசயிலநாத சுவாமிக்குப் பாத்தியமான அரசபத்து முதலிய நஞ்சைகளைத் தமது சொந்தப் பண்ணையில் வைத்து உழவுதொழில் விருத்திபண்ணிப் பயிர்செய்து அதனுல் வரும் நெல் முதலியவைகளினுல் நித்தியல் பூசை, மாதவிழா, தேர்த்திருநாள் முதலியவற்றைச் சிறப்பாக நடத்திவந்தார்.

சிவசயிலநாத சுவாமிக்கு அத்திரிமாமுனிவ தினமு மைந்துகாலப்பூசை செய்து வருகிறுரென்று புராணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

## சிவசயிலத் தலபுராணம்

### தலவிசேடச் சருக்கம்

அத்திரிமுனி பூசனை புரிந்திட வதிக
உத்தமத்தினுக் குத்தம சதாசிவவுருவாய்
முத்தமிழ்வரைக்குத்தர திசையினின் முழங்கித்
தத்துதண்புனற் கடனையின் றென்கரைதனிலே —

அத்திரிமுனி பூசித்ததாள ரவிந்தன்
மொய்த்த பொன்னிறமேனிய னீலமு முகுந்த

வித்துருமமா மேனியன் கோரக்கர் காண்போன்
இத்திருப் பெயர் பன்னிரண்டாகவே யிருக்கும். —

:

அத்திரிமுனிக் கனுக்கிரகமான சருக்கம்

இருப்பதாகவே சிவசயிலேசரு மிருந்தார்
விருப்பமாகவே யத்திரிமுனி விசுவசத்தா
லருப்பு மன்பினல் விசுவகன்மாவை யங்கழைத்தே
திருப்பணியிமையோர் நிருமாணமாய்ச் செய்தான். —

ஆலயம் பிரகாரம் விமானங்களமைத்தும்
நாலுவாயிலுமமைத்து நற்றேவர்யாவருக்குஞ்
சாலவவ்வவர்தானங்க டனை புஞ் செய்தைந்து
காலமத்திரி மாமுனி கடனையிலாடி. —

சயிலநாதனை இமையவர் தலைவனைத் தனியைக்
கயிலையாளனைப் பரமகல்யாணியாங் கருணை
மயிலை மேவிய குழகனைப் பூசித்து மகிழ்ந்தே
உயர்வதாங் கிருத்திய மனேசித்தியு முடைத்தாய். —

இருந்தனரெனச் சூதமாமுனி வனங்கிருந்த
வருந்தவச்சவுனகர் முதலாதியோர்க் கறைந்தான்
திருந்து மாதவர் செவிப்புலன் றெவிட்டிடப்புகன்ற
பொருந்து சூதனை நோக்கியே புகலுவதானர். —

முன்னெருகாலத்தில் பாண்டிய தேச மன்னவரான சுதரிசன பாண்டியன் கடனை நதியில் ஓர் அணை கட்டுவித்து வாய்க்காலுண்டுபண்ணி நஞ்சை திருத்தி அதற்கு அரசபத்தென்று பேரிட்டார். அதன் பக்கங்

குறுவைப்பத்து முதலிய நஞ்சைகள் அநேகர் திருத்திவைத்தார்கள். இவைகளுக்கெல்லாங் கோவிற்பத்தென்று பேர் வழங்கிவந்தன.

சுதரிசன பாண்டியனுக் கனுக்கிரகமான சருக்கம்

மன்னவனன் பூரடைந்து வைகிவாழ்நாள்
வல்லமறையவர்க் கூவிசயில நாதர்
சன்னிதியிற் றினமுமைந்து காலப்பூசை
தவறாதேபடி நடத்துந் தகைமைசெய்தே
துன்னு பெருவாத்தியங்கள் நடனமாதர்
தொண்டு புரிவினைஞர் மற்றத்தொழிலோரந்தச்
சின்னமதிற் குறையாமற் றொடுத்தே நித்தத்
திருவிழா மாதவிழாச் செய்வதானன். —

திருப்பணிகள் மிகப் புரிந்து மனவாக்காயஞ்
செலுத்தியே சிவசயிலப் பெருமானுர்க்கு
விருப்பமுட னவமணிகள் குயிற்றிக்காந்தி
விளங்கிய பல்பணிகளுடன் விதப்பட்டாடை
பெருப்பமுடன் வேண்டுவன வளித்தே மன்னன்
பேருவகை யெய்தினன்றன் பேர்ப்பத்தென்று
மிருப்பதெனக் கடனையிலோரணையுஞ் செய்தே
யிருநிலத்தில் அரசபத்தென்றெடுத்துக் கூற —

புறவுகளும் வேண்டுவன திருத்திப் பொங்கர்
பூஞ்சோலை பலவளமு மிகவுஞ் செய்தே
சுரர்பணியுங் கயிலாய மிதுவா மென்னச்
சுதரிசனனன் கமைத்துத் தொழும்பு பூண்டே

இரவுபகல் சிவசயிலநாதரோடு
மம்மை கலியாணியையு மிறைஞ்சியேத்திப்
பாவையுலகாண்டிருந்தே யந்தியகாலம்
பரமசிவசாயுச்சிய் பதவிசேர்ந்தான்.

சிவசயிலப் பள்ளு என்ற வொரு பிரபந்தம் நான் அச்சிட்டிருக்கின்றேன். அதில் கோவிற்புறவு முதலி யவை விவரமாய்த் தெரிவதுடன் எனது முன்னோர்கள் கோவிற்பண்ணைவைத்துக் கிருஷித்தொழில் நடத்திப் பயிர்கள்செய்து வரும்படியைப்பெருக்கி கோவில்பூசை திருவிழா நடத்திய விபரங்களும் தெரிகிறது. இத ஞல் எனது முன்னோர்களுடைய பேருங் கீர்த்தியும் நன்கு விளங்குகிறது.

ஆறை அழகப்பமுதலியார் சிவநேசம், பக்தி இவைகளிற் சிறந்தவரானதிஞலே தன் தம்பி சிவசயில முதலியார் சிவசயிலத்தலத்தில் மிகுந்த பக்தி சிரத்தை யுடன் தொண்டுபுரிந்துவருவதை யறிந்து மேற்படி கோவிலுக்கு நித்தியல், விழாப்பூசை, காலசந்தி, உச் சிக்காலம், சாயங்காலம், அத்தசாமம், இந்த ஐந்து காலத்துக்குங் கட்டளை யேற்படுத்தி நடக்கும்படி மானிபங்களும் நிலங்களுங் கொடுத்திருக்கிருர்கள்.

அதில் விழாப்பூசைக் கட்டளையும் அதைச்சேர்ந்த மானிபங்களும் அவர்களுடைய காலமுதல் பரம்பரை யாக எனது குடும்பத்தில் இருந்துவருகிறது.

காலசந்திக் கட்டளை மானிபம் கோவில் தஸ்தி யுடன் சேர்ந்திருக்கிறது.

உச்சிக்காலக் கட்டளையும் அதைச்சேர்ந்த நிலங்களும் மானிபமும் தளவாய் முதலியார் குடும்பத்தில் சேர்ந்திருந்தது. அதில் சில பாகஸ்தர் அவர்களுக்குப் பாத்தியமான கட்டளைப்பாத்தியதையும் மானிபத்தையுங் கோவிலுக்குக் கிரையஞ்செய்து கொடுத்துவிட்டார்கள். மேடை தளவாய் திருமலையப்ப முதலியாருக்குப் பாத்தியமான கட்டளை நிலமும் மானிபமும் அவர்கள் வசமிருந்துவருகிறது.

சாயங்கால அத்தசாமக் கட்டளைக் கேற்பட்ட நிலங்களை அதையனுபவித்த சுவான்தார்கள் தங்களுக்கே பாத்தியப்படுத்திக்கொண்டார்கள். கோவில்ப் பத்துக்கென்று ஏற்பட்டுப் பாத்தியமான அரசபத்துப் முதலிய நஞ்சைகளையும் அனுபவதாரான குடிகள் தங்களுக்குப் பாத்தியமாகச் செய்துகொண்டார்கள்.

பாவநாசம் ஸ்தலத்துக்கு ஆறை அழகப்ப முதலியார் வந்திருக்கும்போது மேற்படி சந்நிதானததின் முன்பாக பாவநாசத் தலபுராணம் பாடி யரங்கேற்றப் பட்டிருக்கிறது.

பாவநாசத் தலபுராணம்

அம்பொன் மாளிகையாறைவாழ் மயிலப்பனருள் குமாரசுவாமி
தம்பியாமுகில்புகழ்ச் சிவசயில நாதனுக்கு முன்னவனானேன்
கம்பமாகரி காத்தருள் அழகப்பன் கனிந்தவன் பொடுகேட்ப
வும்பர்நாயகர் சந்நிதானத்தினி லுரைத்ததிக் கதையாமால்.

பாவநாசங் கோவிலில் பங்குனிமாசங் கடைசியில் உற்சவம் நடந்து சித்திரைமாசம் முதல்தெய்தி விசுவன்று தீர்த்தவாரியும் அன்றிரவு தெப்பஉற்சவம்ரிஷப வாகனச் சேவையும் நடக்கும். ஒரு முறை ஆறை அழகப்ப முதலியார் தெரிசனத்துக்கு வந்திருந்தார். அப்பொழுது தம்பி சிவசயில முதலியார் போகவில்லை. அதைப்பற்றி நம்முடைய சிவசயிலநாதருக்கு தெப்ப உற்சவமில்லையே, ஏன் வரவில்லையென்று ஆழ்வார் குறிச்சியிலிருந்து வந்தவர்களிடஞ் சொல்ல அதையவர்கள் சிவ்சயில முதலியாரிடம் வந்து சொல்ல, அவர் உடனே ஒரே தினத்தில் தெப்பக்குளம் வெட்டித் தண்ணீர் பெருக்கிச் சிவசயிலநாதர் ஸ்ரீ பரமகலியாணி அம்மையும் எழுந்தருளப்பண்ணி அழைத்துக்கொண்டு வந்து தெப்பத்துக்கு வேண்டிய அலங்காரங்களுஞ் செய்து தன் தமையனான ஆறை அழகப்ப முதலியாருக்கு அறிவிக்க அவர் வந்திருந்து தெப்ப உற்சவம் நடத்தித் தெரிசனமுஞ் செய்தார்.

அந்தத் தெப்பக்குளத்துக்கு நான்கு படித்துறை சுற்றுமதில் நடுமண்டபம் சுவாமி எழுந்தருளுமண்டபம் முதலியன செய்து அதன் பக்கம் ஒரு அக்கிரகாரமுங் கட்டிவைத்துப் பிரதிட்டை செய்தார்.

அப்பால் சிவசயிலக்கோவில்த் திருப்பணிகளுஞ் சன்னிதிமண்டபமுமுடித்து உற்சவத்தில் ஒன்பதாந்திருநாள் மண்டபப்படிக்காக சிவசயிலம் போகிற சாலை மத்தியில் மண்டபங்கட்டி யதில் ஒன்பதாந் திருநாள் அன்று சுவாமியை மண்டபத்தில் எழுந்தருளச்செய்து மஹா அபிஷேகமும் பிராமண போஜனமும் செய்

வித்து இரவு கயிலாசபருவதம் கிளிவாகனச்சேவை தெரிசனம் பக்தர்கள் தெரிசித்து ஆனந்திக்கும்படி செய்துவைத்தார். அது பாரம்பரையாக எனது குடும் பத்திலே நடந்துவருகிறது.

சிவதெரிசனஞ் செய்கிற பக்தியினுல் சிவசயிலத் தலத்தில், நெல்லையப்பர் சொக்கலிங்கம் பிரதிட்டையும், அதைப்போல் திருநெல்வேலிக் கோவிலில் சிவசயில நாதர் சொக்கலிங்கம் பிரதிட்டையும், மதுரையில் நெல்லையப்பர், சிவசயிலநாதர் பிரதிட்டையுஞ் செய்து வைத்துத் தெரிசனஞ் செய்துவந்திருக்கிறுர்.

பாவநாசம், திருக்குற்றுலம், திருநெல்வேலி, திருப் புடைமருதூர், மதுரை, சங்கரன்கோவில் முதலான அநேகங் கோவில்களில் கட்டளைக ளேற்படுத்தியிருக் கிறுர். அவைகளில் அநேகம் தளவாய் முதலியார் குடும்ப பாரம்பரையிலிருந்து வருகிறது. சங்கரன்கோ வில் கட்டளையும் அதைச் சேர்ந்ததும் அவர் வம்ச பரம் பரையில் இப்பொழுதிருக்கிற பழநியப்ப முதலியார் வகையரு வசமிருந்து வருகிறது.

ஆறை அழகப்ப முதலியார் அதிகாரம் பாண்டி அரசியான மங்கம்மாளரசி ஆக்கினைக்குள் நடந்து வந்திருப்பதினுலே கன்னியாகுமரிமுதல் இராமேஸ் வரம்வரை சாலைகளுஞ் சத்திரங்களு முண்டுபண்ணி அவைகளில் தர்மங்கள் நடந்துவரும்படி செய்து அவை களுக்கு மங்கம்மாள் சாலை, மங்கம்மாள் சத்திரமென்று பேர்கள் வைத்திருக்கிறுர்.

அதில் சில சத்திரம் தளவாய் முதலியார் குடும் பத்திலும் சில முதலிமார் குடும்பத்திலும் மற்றவை

கள் இனவிவரங்கள் தெரியாமலுமிருப்பதாய்த் துலங்குகிறது.

மேற்படி ஆறை அழகப்ப முதலியார் தன் பந்துக்களில் அநேகம்பேர்களுக்கு உத்தியோகங்களும் மானியங்களும் நஞ்சை புஞ்சை நிலங்களும் கொடுத்து ஆதரவு செய்துவந்ததுடன் முன்னோர் செய்த தர்மங்களைப் பரிபாலனஞ்செய்தும் வந்திருக்கிறார்.

சிவசயிலப்பள்ளு என்ற பிரபந்தத்தில் எனது முன்னோர்கள் பேர்களமைந்த பாடல்கள் இராமநாதன் கவிராயரால் பாடப்பட்டுள்ளன.

## சிவசயிலப்பள்ளு

### கடவுள்வணக்கம்

### நாமகள்துதி.

செங்கையின் மழுப் பதித்தவர் கதித்தவர்
சிந்துரத்துரி யுரித்தவர் தரித்தவர்
திரைகடலைத்தென் கரையினர் வரையினர்
செம்மேனியனார்
எங்களுக்கருள் தெரிபவர் புரிபவர்
யிமையமங்கைகைப் பிடித்தவர் நடித்தவ
ரெழிலழகப்பன் பணிபவர் சிவசயி
லேசர் பள்ளிசைக்கே,
வெங்கலி யெனைப் பிடித்ததை யடித்ததை
விடுத்தவள் தடுத் தவள் நன்மை கொடுத்தவள்
விதிநாவினி லுறைந்தவ ணிறைந்தவள்
வில்வாணுதலாள்
பங்கயத்தவர் வீட்டினள் பாட்டினள்
பணைத்தெழுந்துணைத் தனத்தினள் கனத்தினள்

பாரதிபதி யென்ன விருத்துமென்
பாரதி துணையே.

சுப்பிரமணியர் துதி.

தலையில்வைத்த வெண்மதியினர் கதியினர்
தவமுடித்தவ ரிதயத்தில் வைத்தவர்
தனிமேருவை வளைத்தவர் முளைத்தவர்
தலைமாலையினர்

பலியெடுத்த கபாலத்தர் சூலத்தர்
பார்வேந்தனுஞ் சங்கரநாரணன்
பரவிய சிவசயி லேசர்க்கிசை
பள்ளேசலிலே,

மெலிவுறு சொற்கள் வருகினுங் கருகினு
மேளத்தெழுதாளச் சுருதிகள்
விலகினுந் தமிழ்ப்புலவர் தள்ளார் சற்றும்
விள்ளார் குறையே

வலபையைப் புணராறுமுகன் துணையென
வருகுகனாறு முகனுமென் னுவுடை
மங்கையுங்கன மங்கள சொற்களை
வருவிப்பவரே.

இளையபள்ளி வரவு

சமஸ்தான பதிஆறை அழகப்பன் முழுதுஞ்செய்
சர்வமானிபஞ் சிவசயிலக் கோவில்
உமைத்தானு மகிழ்பண்ணைக் குடும்பனெனத் தாள [நல்
லீரில் வந்தானென்னைக் கண்டானுளமருண்டான்

அமைத்தாலமைபடாமற் கொடுத்தா னென்னையவன்
[கையி
லன்பதுபொன் :தாலிகட்டிப் பின்பெனனைக்
கொண்டான்
பமித்தான் கிடப்பானந்தமூலைக் கூடவனுக்கேத்த
பள்ளி யிளையவளும் நானே ஆண்டே, —

குடும்பன் வரவு

மன்னுபுகழ் குமரப்பன் மன்னனுக்கு மாமனென
வந்ததுரை யழகப்பன் மருவார் சிங்கஞ்
சன்னதிமண்டபந் திருச் சுற்றுமண்டபங்களெல்
லாஞ்
சம்பிரமமாகச் சிவசயிலேசர்க்கு
பொன்னைப் பொன்னென்று பாராமற் றிருப்பணி
குறைதீர்த்த
புகழ்க்கோவிலுக்கு நித்திய பூசைக்கு நெல்லுஞ்
செந்நெல்லுண்டாக்கி யபிஷேகத்துக்கு கன்னல்
வாழை
தினம் பயிரிடுஞ் சயிலக்குடும்பனுனே ஆண்டே.—

நாட்டுவேளம்.

நாலுமாமறை தேர் பெரியோரும்
நடனவான்பரி மன்னியவாருஞ்
சூலபாணிச் சிவசயிலேசர்
துலங்குகோயிற் றொழில்மடவாரும்
காலகாலத்திற் றுனஞ்செய்வோருங்
கூடனையாறுங் கலைத்தமிழோதுஞ்

சிலனுறை அழகப்பன் பேருஞ்
சிறந்த கீர்த்தியன் பூரெங்களூரே.

## குயிற் கூக் கேட்டல்

தண்டமிழோர் மிகுந்த புகழன்பூரின்மேவு மெங்கள்
சயிலேசர் தழைக்கவே கூவாய் குயிலே
கண்டனைய மதுரமொழிக் கவுரியுமையாய் பரம
கலியாணி வாழவே கூவாய் குயிலே
நலனுறு சிவாகமத்தின் முறைவழியே பூசைசெய்யும்
நம்பிமார் தழைத்தோங்கக் கூவாய் குயிலே
பலனுறு மென்றே கோயிற்றுனத்தாருடனிறைஞ்சும்
பரிசனங்கள் வாழவே கூவாய் குயிலே
அனந்த ரெங்கசமுத்திரத்து மகாசனங்கள் காலசந்தில
அபிஷேக நைவேத்தியமிகக் கூவாய் குயிலே
தினந்தோறும் நன்றாய் நடத்துங்கட்டளையுமவர்களே
செழித்தோங்கி வாழவே கூவாய் குயிலே
தண்டிகை யிந்திரனுரை யழகப்பன் கோயிலுக்குத்
தலத்தரசு வாழவே கூவாய் குயிலே
மண்டலவேந்தன் தம்பி சங்கரநாரண ராசன்
வம்சமெலாந் தழைக்கவே கூவாய் குயிலே
உத்தமன் தென்னுறை நகராதிபனுழா பூசை
யுச்சந்திக் கட்டளை சிவனுர்க்கு
அத்தசாமக்கட்டளை யிவை மூன்று நடத்துதுரை
யழகப்பன் வாழவே கூவாய் குயிலே
சாலையின் மண்டபஞ் சிவசயிலர் சன்னதி மண்டபம் [நாளுந்
தழைத்த தெப்பக்குளத்தோ டக்கிறாரஞ்.

சீலமுடன் மகிழ்ந்துகட்டு மாறையழகப்ப னெனுந்
தெய்வேந்திரன் தழைத்தோங்கக் கூவாய் குயிலே

மருவைத்த குழலார்வேள் குமரப்பன் சிவசயில
மயிலப்பன் வாழவே கூவாய் குயிலே

தருவொத்த திருநாவுக் கரசுதுணை மயிலப்பன்
தன்ம துரை வாழவே கூவாய் குயிலே

நாட்டுக்கணக் கெழுதுஞ் சூரிய தேவனுந் தன்மவான்
நன்மைபெற்று வாழவே கூவாய் குயிலே

பாட்டுக் கணக்கறியா ராமநாதன் கவிராயன் மொழிப்
பள்ப்பிரபந்தம் வாழவே கூவாய் குயிலே

பொருநைநதிபாய் பாவுங்கடனை நதிபுறவுமிகு
பூத்தோறும் நெல்விளையக் கூவாய் குயிலே

தருணமறிந்தே திங்கண் மும்மாரியும் பொழிந்து.
சயிலேசர் தழைக்கவே கூவாய் குயிலே

## மழைபெய்தல்

### கலிப்பா

தெண்டிரை நீருண்டு சிவசயிலநாதருள்
கொண்டுவரை கொண்டிரைச்சல்கொண்டு கொண்ட
[லேழுமொன்றாய்
மண்டுபுகழ் சேர்ந்த மனைவாழ் குமரப்பன் கொடை
[யைக்
கண்டிதுவு மப்படிக்குக் கானூன்றிப் பெய்ததுவே.

## பண்ணைக்குரம்வைக்க ஆயனரை வருவித்தல்

குட்டிக்கூடிடையனுடுங் கெட்டியாக விப்பொழுது
கூட்டிவருவேனென் றிடைக் குடியிலே சென்றான்
எட்டுநாளாய்ப் பெரிய கோனு னின்றுகொண்டு
[வருவேனென்று
னெங்க ணயினருக்கு நானென்ன சொல்லுவேன்
அட்டிசொல்லே மாறை அழகப்ப முதலியாரய்ய
னவர்கள் பண்ணைக் கிடையாச்சு தங்கேவருவோ
மட்டிலாத கீர்த்தியன் பூர்ச்சயிலர் பண்ணைக்குரம்
[வைக்க
வாருமென்று பள்ளன் சொல்ல வருவோ
[மெனறூர்கள்.

### நடவு நடல்

வெள்ளிமலையஞ் சாரலருகில்
மேற்கே முகத்தை நோக்கியே
விருப்பத்தோ டெழுந்தருளியிருந்த
விமலர் கமலச் சரணினர்
புள்ளிமானைக் கரத்திலே வைத்துக்
கொள்ளு மேன்மைப் பரமனர்
புகழன்பூர்ச் சிவசயிலேசர் பண்ணைப்
பொற்கலங் தூக்கி நடச்செய்தே
வள்ள லாறை யழகப்பன் பண்ணைப்
பள்ளி சிவனி கடைக்கண்ணால்
வாவென்றாள் துள்ளிப் பாக்குப் பிளவு
தாவென்று ளில்லைப் போவென்றாள்

துள்ளியெழுப்பி மடியைப் பிடித்துச்
சோதித்தாள் மனம் பேதித்தே
தொட்டதுக்கவள் மூலையைப் பிடித்துக்
கட்டினான் பாரும் பள்ளீரே.

தன்மதுரை சங்கரநாரணன்
மன்மதன் முன்பு வந்தவன்
தருப்பணி செங்கை யழகப்பன் செய்யுந்
திருப்பணிமிஞ்சு கோயிலார்
புன்மதியெனக் கொழித்தவர் சிவ
சயிலநாதர் பண்ணையில்
புகழ்பெறும்புலி முகந்தரன திருத்துப்
புரவு முழுதும் நடுகச்சே
நன்மைப்பட்டொரு மாடியே நடும்
நடவை விட்டுப் போட்டோடியே
கவ்வல்த் தோட்டத்தி லொதுங்கினாள் பண்ணை
நயினாரைக் கண்டு பதுங்கினாள்
மன்மதன் துயர் நடக்கவே பள்ளன்
வகையறிந்ததை யடக்கவே
மாட்டாதவன் போய்த் தொட்டுளம்பாடிப்
போட்டான் காணும் பள்ளீரே.

சுந்தரர்க்கொரு தூதனார் சிவ
சயிலநாதர் பண்ணையில்
தோன்றுமிருளியடி வட்டமுங் கரிச்
சுட்டான் பள்ளமிதுவலலால்
கந்தனைப்பணி யழகப்ப னுழா
பூஜைக் கட்டளை உச்சந்திக்

கட்டளையுட னத்த சாமக்
கட்டளை வயல் நடுகச்சே,
செந்திக்குடும்பன் கொழுந்தியா ரென்று
திருகி முலையைப் பிடிக்கின்றான்
சித்தப்பன் முத்த னதுகண் டவனைச்
சென்னை தசர வடிக்கின்று
னெந்தக் குடும்பன் சும்மாநின் றவ
னெல்லாருஞ்சென்று தகர்த்திட்டார்
இளப்பமாயொரு சிறுக்கியால் வந்த
சளத்தைப் பாரும் பள்ளீரே.

பயிர்கள் வளர்ந்து விளைதல்

கலிப்பா

ஐந்தருத் தென்னுறை யழகப்பன் வங்கிசமெல்லாஞ்
சந்ததமும்வர்த்தனையாய்த் தான் வளர்ந்து வாழ்வது
செந்தமிழன்பூர்ச் சிவசயில நாதர்பண்ணைச் [போற்
சொந்தவயற்குணடவு சோராம லோங்கியதே.

சிந்து

நட்டசீர் வயலெல்லாம் நட
வெட்டுநாளையில் தேறி
நற்குருத்துகள் வாங்கிக் குழைந்
துட்கருப்புகளோங்கி
முட்டின்மேலரையளவாய் வளர்ந்
திட்டபோதரைத் திரண்டு
முதிர்சூற் பொதிகாட்டிக்
கதிர் முழுதுந் தலைநீட்டி

சிட்டர் போற்றியசயிலே சரை
யிட்டமா யழகப்பன்
சிரமே வணங்குதல்போல் பயிர்
தலையானது வணங்கிச்
சட்டமாய் விளைந்தநிலே பள்ள
ரட்டகாசங்கள் செய்தே
தனியே வந்துசொனனர் நல்ல
தென்றே பண்ணை நயினர்.

நெல்லளத்தல்

சிந்து

பங்குனி மாதத்தைத்
திருநாளுக் காயிரங்கோட்டை நெல்லுப்
பாட்டத்தில் வாங்காமல்
பண்ணைக் களத்தினில் அளந்தேன்;
செங்கான் பிறப் புள்ளிப்
பாட்டத்திலெண்பது கோட்டை நல்ல
செம்பாளை நெல்லு
தினம் பூசைக் கன்பாக அளந்தேன். 1

ஆறை யழகப்பன்
சாலையில் மண்டபப்படிக்கே கோயி
லதிவகுப்பாய் முன்னூத்
தன்பது கோட்டை நெல்லளந்தேன்;
மீறு திருப்பணி
வேலைக் கொருமாத்தைப் படிக்கு பள்ளன்
வேலானளக்கு நெல்
நாலாயிரங்கோட்டை யளந்தேன். 2

பால மதிதவழ்
சோலைக் குளத்துரய்யருக்கே நித்த
மழை பெய்ய வேணுமென்
றெழுபது கோட்டை நெல் அளந்தேன்;
காலு மணையு
முடையாமல் சாவலார் தமக்கும் வெள்ளைக்
கல்ப் பூதத்தாருக்கு
முப்பது கோட்டை நெல் அளந்தேன். 3

கையுங் கணக்கும்
விளங்கிய சூரியதேவன் தம்பான்
கட்டுஞ் சிவசயி
லப் பிள்ளையார்கள் மண்டபத்தில்
ஐயர் சயிலரெழுந்தரு
ளுஞ் சிறப்பினுக்கே கோயி
லதிக வகுப்பாக
அறுபது கோட்டை நெல் அளந்தேன் 4

கோயில் பரிசன
நம்பிமார் தானத்தார் தலத்தார் பத்திக்
கொண்டது நாற்பது
கோட்டை மலைமுண்டன் அளந்தேன்;
ஆயக்க மாயொரு
பூவுக்கு நூற்றெட்டுக் கோட்டை பற்றும்
அண்ணாவி நட்டுவனர்
மேளததாருக்கு அளந்தேன். 5

பொசிக்கக் குலைவாளை
யரிசிக்கு வலைக்காரர் கொண்டார்கள் சோரப்

புயல் வண்ணர் பெருமணல்
வாரியைக் கைப்பற்றினரே;
நிசத்தால் பெரு வெள்ளை
யைச் செட்டியாரேத்துக்கொண்டார் மத்த
நெல்லும் வித்தும் களத்
துக்குள் கட்டுக்கிடை ஆண்டே. 6

குற்றுலக் குறவஞ்சி

தரு—இ-ம் கல்யாணி—ஆதிதாளம்

பல்லவி

மேயினுமையே—பறவைகள்—மேயினுமையே.

அநுபல்லவி

மேயினுமையே குற்றாலநாதர் வியன்குலசேகரப் படிக்
குளங்களும்
ஆயிரப்பேரியும் தென்காசியுஞ் சுற்றிய பிரையுந்
தேளியுமாராலுங் கொத்தியே. மேயினு

சரணம்

ஆறை யழகன் கப்ப பூபாலன் கட்டளை
யன்பன் திருமலைக்கொழுந்து தன் கட்டளை
காராம்பு குறறாலச் சங்குகன கட்டளை
நங்கனெல்லாரரி நரபாலன் கட்டளை
வீறுசேர் பால்வண்ணச் சங்குவங்கட்டளை
மிக்காணவோ வனுக் கிருஷ்ணன் வணிகேசன்
பேருடையன்பன் வருசங்கு முத்துதன
பேரான கட்டளைச் சீரான பற்றெல்லாம.
மேயினு

அப்படியிருக்கும் நாளில் ஆறை அழகப்ப முதலி யார் மதுரையில் ஸ்ரீ சொக்கநாத சுவாமி ஸ்ரீ மீனாட்சி அம்பாளுக்கு கும்பாபிஷேக முகூர்த்தம் நிச்சயித்து தெரிசனததுக்கு சிவசயில முதலியாரை வரும்படி யெழுதியதற்குப் போகவில்லை. அதைப்பற்றி தெரி சனஞ்செய்ய வந்தவர்களிடம் தம்பி வாராத காரண மென்ன? சுவாமி சிவசயிலநாதர் கோவிலில் மொட்டைக் கோபுரம் பொன்பூசுகின்றனரோ? எனக்கேட்டனர் அதைக் கேட்டவர்கள் சிவசயில முதலியாரிடம் வந் தறிவித்தனர். அவரது தெரிந்தவுடனே மூலஸ்தானம் கோபுர விமானங்களைத தங்க முலாசம்பூச ஆரம்பிவித் தார். அவ்விதம் பூசுமததியில் தன்னிடமிருந்த தங்கம் பொன் முதலிய பொருள்கள் போதாதென ஏற்பட் டது. அதற்குத் தம் பத்தினியின் நகைகளை உபயோ கப்படுத்தி மேற்படி காரியத்தை பூர்த்திசெய்தார்

அப்பால் கும்பாபிஷேகத் தினம் நிச்சயித்து வேண்டிய ஏற்பாடுகளும சரிவரச் செய்து, அதன் விவ ரத்தைத் தமையனுருக்குத் தெரிவித்தார். அவர் அது தெரிநது தம் தம்பி பத்தினிக்கு நகைகளுஞ் செய்து கும்பாபிஷேகத்துக்கு வேண்டிய சாமான்களுடன் வந்திருந்து நடத்தித் தெரிசனஞ்செய்தார்.

அதன்பின் கொல்லம் 90:-ம் ஆண்டில் செப்ப றைக் கோவில் சபாபதிப் பிரதிட்டை செய்து கும்பா பிஷேகமும் 910-ம் ஆண்டில் திருநெல்வேலி சுவாமி நெல்லையப்பர் ஸ்ரீ காந்திமதி வடிவம்மாளுக்கு அஷ்ட பந்தன கும்பாபிஷேகமும் நடப்பிவித்தார்.

இத்தகைய தர்மங்களுங் கீர்த்தியும் நீதியுமுள்ள ஆறை அழகப்ப முதலியார் தமது பந்துக்களில் விவேகமுந் தீரமுமுள்ள குன்னூர்க் குமாரசுவாமி முதலியாரைத் தமக்கு அந்தரங்கமான மந்திரியாக வைத்து அவருக்கு உக்கிருணி யென்னும் உத்தியோ கத்தைக் கொடுத்து சர்வ அதிகாரமும் தமக்குள்ளடங் கிப் பார்த்துவரும்படி செய்திருந்தார். உக்கிருணி யென்பது பொக்கிஷதார் அவர் எப்பொழுதும்கூடவே இருந்து வேலைபார்த்துவருவார்.

இதன் மத்தியில் திருவனந்தபுரம் இராச்சியத்தில் நேரிட்ட கலகத்தை பாண்டிய மன்னர் உத்தரவுப்படி போய் ஆறை அழகப்ப முதலியார் விசாரணை பண்ணிக் கலகத்தை நிவிர்த்திசெய்து நியாயமான முடிவு செய் திருக்கிறார். அதன் விவரம் திருவாங்கூர்ச் சரித்திரத்தில் விவரமாகச் சொலலப்பட்டிருக்கின்றது.

## கொல்லம் 905-ம் ஆண்டேக்கு இங்கிலீஷ் 1729-1730ம் வருஷங்களில் திருவாங்கூரில் நடந்த சரித்திரம்

திருவாங்கூரில் முன் பட்டத்திலிருந்த மஹாராஜா வுக்கு குஞ்சுதம்பிகளென் றழைக்கப்படும் பப்பு தம்பி இராமன்தம்பியென இரண்டு குழந்தைகளிருந்தனர்.

அப்பொழுது அந்நாட்டில் அமைதியற்றுப்போம் படி செய்துவந்த மூர்க்கர்களான கலகக்காரர்கள் எட்டு வீட்டுப்பிள்ளைமார்கள் மாடம்பிமார்கள். இவர்களின் ஏவுதலினல் தம்பிகளிருவரும் காலஞ்சென்ற மஹா ராஜாவுக்குப்பின் பட்டத்திலிருந்த இளைய மஹாராஜா

வின் அதிகாரத்தை உல்லக்குமெண்ணத்துடனே இரகசியமாகக் கிளம்பி இங்கிலீஷ் 1729-ம் வருஷத்தில் திருச்சினுப்பள்ளியில் அப்பொழுதங்கிருந்த பாண்டிய அரசனான நாயக்க கவர்னரின் ஒத்தாசையைப் பெறும் பொருட்டுச் சென்றார்கள்.

அங்கவர்கள் வந்துசேர்ந்ததும் பாண்டிய மன்னவரான கவர்னர் விஜயரெங்க சொக்கநாத நாயக்கர் திருவாங்கூர் மஹாராஜாவின் புத்திரர்களுக் குரிய சகலவிதமான உபசாரங்களுடன் வரவேற்றார்.

அப்பால் அவர்கள் திருவாங்கூரிலுள்ள இளைய அரசன் தங்களுக்குரிய சிம்மாசனத்தை அபகரித்தவன் என்றும் தங்களுக்கு அவன் மரியாதையோடு நடக்கவில்லை யென்றும், கப்பஞ்செலுத்தவில்லை யென்றும், உதவிப்படையை விலக்கிவிட்டானென்றும், பாண்டிய நாட்டை எதிர்ப்பதற்குரிய படையெடுப்பதற்கு எண்ணங்கொண்டிருக்கிறானென்றும் விபரமாகப் பாண்டிய மன்னவரான நாயக்க கவர்னரிடந் தெரிவித்தார்கள்.

மேலும் காலஞ்சென்ற மஹாராஜாவின் குமாரர் ஆனதுபற்றி இயற்கையான நியாயவிதிப்படி தங்கள் பிதாவின் சிம்மாசனத்திற்குத் தாங்களே சரியான வாரீஸ் பாத்தியதையுள்ளவர்களென்று அவர்கள் சொன்னதுமல்லாமல் கொடுங்கோல் மன்னனான திருவாங்கூர் அரசன் தங்களை உரிமையினின்று தள்ளிவிட்டதுமன்றி தாங்கள் சுகமாகக் காலக்ஷேபஞ் செய்வதற்குரிய சாதனங்களையுங் கொடுக்காமல் மறுத்துவிட்டானென்றுங் கூறினார்கள்.

இதையெல்லாம் பாண்டிய மன்னவர் கேட்டு அவர்கள் விஷயத்தில் அனுகூலஞ்செய்ய வெண்ணங் கொண்டார். முன்னமே கப்பஞ்செலுத்தாமல் திருச்சி னுப்பள்ளி உதவிப்படையைக் கலைத்தனுப்பின மஹா ராஜாமீது கடுங்கோபம் மூண்டிருந்தது. அதனாலே தம் உத்தியோகஸ்தரி லொருவரான ஆறை அழகப்ப முதலியாரைப் போய் எதிர்க்கக்ஷிக்காரர்களின் பாத்தி யதைகளை விசாரித்து மூத்தவரான பப்புதம்பியைத் தம் தகப்பனாரின் சிம்மாசனத்தி லேற்றிவைக்கும் படிக்கு ஓர் சிறு சேனைப்படைகளுடன் அனுப்பினார்.

பாண்டியமன்னவரிடந் தாங்கள் வந்த காரியத்தில் அனுகூலங் கிடைததென்று பப்புதம்பி பாண்டிய மன்னவருககு மிகவும நன்றிபாராட்டினதுடன் அது விஷயமா யேற்படுஞ் சகல செலவுகளையுந தாமே பொறுத்துக்கொள்வதாகவுந் தாம் பட்டம் பெற்ற வுடன் கப்பம ஒரு பெருந்தொகையாகக் கட்டிக் கொடுப்பதாகவும் வாக்குறுதி செய்து கொடுத்தார்.

அப்பால் ஆறை அழகப்பமுதலியார் சைனியங் களுடன் பிரயாணமாகி திருவாங்கூர் சென்று உதயகிரி யில் வந்து புலியக்குறிச்சியில்த் தங்கியிருந்துகொண்டு மஹாராஜாவிடம் அவர்களது பாத்தியதையைப்பற்றி கேள்விகேட்க ஆரம்பித்தார்.

அதன்பேரில் பட்டத்தரசன் பக்கம் அரண்மனை இராயசம் இராமய்யர் நாராயண அய்யர் என்ற இருவர் முதலியார் முன்வந்து ஆஜராகி சமாதானம்பேசவும் அந் நாட்டின் பட்டத்தினுரிமையைப்பற்றிய சட்டங்களை யெடுத்துரைக்கவும் அனுப்பப்பட்டு அப்படியே அவர்

களும் வந்து மேற்படி விஷயங்களை யெடுத்துரைத்துந் திருவாங்கூர் இராஜகுடும்பத்தில் பட்டத்துக்கு வரும் உரிமை பெண்வழியிலிருந்து வருகிறதென்றும் மாமா வின் சொத்துக்களை மருமகன் அனுபவிக்கும் பாத்திய முடையவனென்றும், அரசர்கள் தங்களிலுங் கீழான ஜாதியிலுள்ள குடும்பங்களிலிருந்து பெண்களை மணம் புரிவது வழக்கமென்றும், அவ்விதமேற்பட்ட சம்பந் தத்தினால்ப் பிறக்குங்குழந்தைகளுக்கு சிம்மாசனத்துக் குரிய பாத்தியதை கிடையாதென்றும் அக்குழந்தை களின் சுக ஜீவனத்திற்காக சர்க்கார் பண்டுகளிலிருந்து பணங்கொடுக்கப்படுமென்றும் நம்பிக்கைக்கொண்டு யுண்டாகும்படியுள்ள சாக்ஷியங்களை ரூபிகரித்தார்கள்.

ஆறை அழகப்ப முதலியார் இவைகளைக் கேட்ட தன் பேரில் வேறு சிலர்களிடமும் விசாரணைசெய்து விஷயததின்னுண்மையையறிந்துகொண்டு பப்பு தம்பி, ராமன் தம்பியின் பாத்தியங்கள் முழுப்பொய்யான தென்று தீர்மானஞ்செய்து அவர்களையுங் கோபித்துச் சினந்து கண்டித்து தங்கள் தகப்பனுர்க்கு மருமகனை யுஞ் சரியான உரிமையுமுள்ள அரசரிடம் இராஜபக்தி யோடும் உண்மையாகவுமிருக்கும்படியாகவும் புத்தி புகட்டி இராஜ்ஜியத்திலுள்ள கலவரையைச் சமாதா னஞ்செய்து வைத்தார்.

அப்பால் திருவாங்கூர் மஹாராசர் சந்தோஷமாக ஆறை அழகப்ப முதலியாருக்கு தக்க சன்மானங்க ளும் பாண்டிய மன்னருக்குக் கப்பங்களுங் கொடுத்து உபசாரஞ்செய்தார்.

அவரதை மிகுந்த திருப்தியுடன் பெற்றுத் தம் மிடமிருந்த சைனியங்களி லொருபாதியை அரசனின் அடங்காத பிரஜைகளை அடக்கும் பொருட்டு அங்கு நிறுத்தி வைத்துவிட்டு மஹாராசாவிடம் விடை கொண்டு புறப்பட்டு திருநெல்வேலி வந்துசேர்ந்தார்.

அதன்பின் திருநெல்வேலி மேலவீதியிலுள்ள தம் அரண்மனை ஆஸ்தான கூடத்தில் சிம்மாசனம் போன்ற வொரு நாற்காலியின் மீது ஆறை அழகப்ப முதலியார் வீற்றிருந்தார். அப்போது பரிவாரங்களிற் சிலர் பணியேற்று நின்றனர். அவரெதிரேயுள்ள தரை சுமார் ஆறுமுள நீளமும் நான்குமுள அகலமுமிருக் கும். அது சேறுமீரமுமாயிருந்தது.

அபபோது அந்த அரண்மனை முற்றத்தில் இருவர் போர்ச்சேவகரும் வரயில்காப்போனொருவனும் பேசி நின்றனர். அச்சமயத்தில் ஏகோம் ஏகோம் என்ற பல்லக்குப் போகிகள் சத்தங்கேட்டதுஞ் சிறிது நேரத்துக்குள் இருபுறமும் படை மறவர் ஓடிவர ஒரு பல்லக்கு விரைந்து வந்தது. அதைப் பார்த்து எசு மான் ஊத்துமலைத் துரை வருகிறாரென்று சொன்னார் கள். அவர்கள் வருகிறார்கள் போலிருக்கிறதென்று வாயில் காப்போன் சொல்ல அதைக்கேட்ட போர்ச் சேவகன் சிவகிரி வன்னியனார் உள்ளே இருக்கிறாரா வெனக் கேட்க அவர்களின்னும் வரவில்லையென்று பதி லுரைத்தான். அதற்கவன் நம்ம எசமான் அவர்களை மட்டும் ஒரு விதமாகவும் மற்றப் பாளையப்பட்டுத் துரை களை ஒருவிதமாகவும் நடத்துகிறார்கள். அது நியாயமில் லையே. இவர்கள் ஸ்தானத்துக்கு இப்படிப் பேத

மாக நடத்தக்கூடாது. பாளையப்பட்டுக்காரரெல்லாரும் ஒன்றுதான். சிவகிரி வன்னியனார்மட்டுமென்ன சாதிக்கிறார்? ஒன்றுமில்லை. வளர்த்த கிடா மார்பிற் பாயும் இது எனக்குப் பிடிக்கவில்லையென்று சொன்னான்.

இதற்குள் பல்லக்கு வந்திறங்கினதும் வாயில் காப்போன் உள்ளே சென்று சமயம் விசாரிக்கப்போனான். அதற்குள் ஊத்துமலைத் துரை பல்லக்கைவிட்டிறங்கி வந்து போர்ச்சேவகனிடம் சிவகிரி வன்னியனார் உள்ளே கூட இருக்கிறாரோவென்று கேட்க, அதற்கவர்களின்னும் வரவில்லையென்று பதில்சொல்வதன்முன் வாயில்காப்போன் வந்து உத்தரவாகிவிட்டது வாருங்களென்றழைக்க, மருதப்பத்தேவர் உள்ளே சென்று முதலியாரை சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்ய, முதலியார், தேவரே வாரும், சுகந்தானா? எழுந்திரும் ஆடைமாற்றிவாரும் பேசுவோமென்று சொல்ல, அதற்குள் தேவரின் ஆட்களிலொருவன் பெரியதாம்பாளமொன்றில் காணிக்கைப் பொருள்களை வைத்துக் கொண்டுவந்து முதலியார் ஆசனத்தின் முன்பு வைக்க முதலியார் பரிவாரத்திலொருவன் உள்ளெடுத்துச் சென்றான்.

வேறொருவன்வந்து பக்கத்திலுள்ள ஓர் அறையில் தேவரை அழைத்துச் சென்றான். அங்கே தயாராயிருந்த வெந்நீரிலே தேவர் நீராடி முதலியாரின் ஆளுதவிய வேறு புதிய ஆடையை உடுத்திக்கொண்டு ஆஸ்தான கூடத்துக்குத் திரும்பிவந்தார். முதலியாரின் அருகே இரண்டு நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அவைகளில் சற்று விலகி யிருந்ததை முதலியார்

குறிப்பிட தேவர் வெகுமரியாதையோடு அதி லுட் கார்ந்தார். பின்வரும் சம்பாஷிக்கத் தொடங்கினர். முதலியாரின் பரிசனங்கள் பின்புறத்து நின்றனர்.

முதலியார், தேவர் உடம்பு சுகமாயிருக்கிறதா? ஊரிலிருந்து பல்லக்கில் வந்தீரா, அல்லது குதிரையா வென்று கேட்கத் தேவர், சுரம் அடித்ததின் பின்பு உடம்பு முழுதுங் குணப்படவில்லை; பல்லக்கில் வந்தேன்.

அங்கே திருவடி திருவாங்கூர் இராச்சியத்துக்குப் போன சங்கதி முடிவுசெய்து திரும்பிவந்த சமாச்சாரந் தெரிந்தவுடனே புறப்பட்டுவந்து சேர்ந்தேன். அங்கேபோன காரியங்களெப்படி முடிவானதென்று கேட்டார்.

அதற்கு முதலியார், பப்பு தம்பி இராமன் தம்பி சொன்னதெல்லாம் பொய். அவனுக்கொருபாத்திய முங்கிடையாது. இராச்சியத்துக்கு மார்த்தாண்ட வர்ம அரசன் உரியவரானதால் அவரையே ஆளும்படி செய்துவிட்டு வந்தேன். இன்னும் நாலுதினத்தில் திருச்சினுப்பள்ளிபோய்ச் சேரவேணு மென்றார்.

அதற்கு திருச்சிக்குத் தாங்கள் போய்விடுவதன் முன் பார்த்துக்கொள்ள அவசரப்பட்டு வந்தேன். அப்படி வருவதற்கு உடம்பு சரியாய்க் குணப்பட வில்லை யென்றார்.

முதலியார் அப்படிக்குவா அவசரசங்கதி யென்ன வென்று கேட்கத் தங்களைக் காணவேணுமென்ற ஆசைதானென்றார். அதிருக்கட்டுஞ் சங்கதியென்ன

சொல்லுமென்று முதலியார் கேட்கத் தேவர் சென்ற வருஷமு மிந்தவருஷமும் பூமி நல்ல விளைவில்லை, மழை பெய்து பாதி பெய்யாமற் பாதி . கெட்டுப்போச்சு குடிகள் கஷ்டமதிகம் ஏழைகளேதாவது அரைவாசி அல்லது கால்வாசி வஜாவுக்குவுத்தரவாக வேணுமென் ளூர். அதற்கு முதலியார் தேவரே உமக்குப் பொன் விளையும் பூமியாச்சே. கடம்பூரா, மணியாச்சியா, உமக்கென்ன குறை யென்று சொல்வதன்முன் வாயில் காப்போன்வந்து சிவகிரித் துரை வந்திருக்கிறுரென்று தெரிவிக்க வாச் சொல்லென்று முதலியார் கூறுமுன் சிவகிரி வரகுணராம வன்னியனர் உள்ளேவந்து சேர்ந்தார்.

அவர் வந்ததை முதலியார் பார்த்து தம்பிவாரும் இவ்வளவுநேரமென்ன வென்று மகிழ்வுடன் வரவேற் ளூர். வன்னியனர் தேவரைப் போல் வணங்காது கை யினுல் வெறுங்கும்பிடு மாத்திரம் போட்டபிறகு கடம் பூர்த் தம்பி வந்திருந்தார் அவருடனே பேசிக்கொண்டி ருந்தேன். அதனுல் நேரமாகிவிட்டதென்று சொல்லிக் கொண்டேவந்து முதலியார் பக்கத்திற்கிடந்த நாற் காலியில் உட்கார்ந்தார்.

அப்பால் தேவரைப்பார்த்து வன்னியனர் வாருங் கள் தங்களைக் கண்டு நெடுநாளாகிவிட்டது. எப்பொ ழுது வரவென்று கேட்க அவரிப்போதுதான் வந்தே னென்ளூர்.

அப்போது முதலியார் வஜாப் பேச்சு பின்னுல் பார்த்துக்கோள்ளலாம் தேவரே போய்வாருமென்று

அனுப்பிவிட்டார். தேவா முகஞ்சுண்டி மனதில் அழுக்காறுஞ் சினமுமா பொங்க வேறு விதியின்றி வந்தவழியே திரும்பிப்போய்ச் சேர்ந்தார்.

அதன்பின் முதலியாரும் வன்னியனாரும் உற்சாகமாய்ப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கும்பொழுது வன்னியனார் முதலியாரை அதிகமாய்ப் புகழ்ந்துபேச அவரதெல்லாம் நானிருக்குமட்டுஞ் சரிதான். அப்பாலெனது பேரை நிலைநிறுத்த ஆரிருக்கிறார்களென்று புத்திரனில்லாத குறை மனததை உறுத்த விசனத்தோடு சொன்னார்.

அதற் கெவருமே எதிர்பாராதவண்ணந் திடீரென நானிருக்கிறேனென்று பதில்க் கேட்டது. அவ்வாறு விடைகூறியது கொத்தளத்து உக்கிராணி வேலையிலிருந்த குமாரசுவாமி முதலியாரே. அவருக்கப்போது வயது பதினெட்டாயிருக்கும். அவர் சிறுவராயிருந்தாலுஞ் சாமர்த்தியசாலி யென்று முதலியாருக்குத் தெரியும். ஆனாலப்பொழுது முதலியார் ஒன்றுஞ் சொல்லவில்லை.

ஆனை அழகப்ப முதலியார் தமககுச் சந்ததியில்லை யென்ற வருத்த மனதை வருத்தினதனால் தமது மாமனார் மாவைக் குமாரசுவாமி முதலியார் காசி முதல் கன்னியாகுமரிவரை கட்டிய தொண்ணூற்றாறு மடங்களையும் அப்பொழுது தருமபுர ஆதீனத்திலிருந்த பண்டார சன்னதிக்குத் தானஞ்செய்து அதில் தர்மங்கள் நடந்துவரும்படிக்குச் செய்து அந்தப் பண்டார சந்நிதி தன் சுயபந்துவாயும் ஞானவானுமிருந்ததி

ஞலே மேற்படி ஆதீனத்துக்கு அளவுகடந்த சொத்துக்கள் தானம்செய்து!தன் குருவாக வணங்கி வந்தார். அந்தக் குருவின் அனுக்கிரஹத்தால் புத்திரப்பேறுண்டாகுமென நம்பி தானதருமங்கள்செய்து வந்து மைந்தன்பெறும் பாக்கியங் கிடையாததால் தன் சகோதரி பெண்ணை ஸ்வீகாரஞ்செய்து தீத்தம்மையென்று நாம கரணமும் பண்ணி அக்குழந்தைக்கு கல்வி கற்பித்து மிக அருமையுடன் வளர்த்துவந்தார். அந்தக் குழந்தைக்கு பதினன்கு வயது பருவம் வந்தவுடன் கலியாணஞ்செய்ய நிச்சயித்து முக்கிய வாசஸ்தானமான மதுரையில் விவாஹம நடப்பிவிக்கிறதாக அழைப்புக் கடிதங்கள் மணமகன் பேரை குறிப்பிடாமல் அனுப்பி வெகு ஆடம்பரமாகச் செய்ய வாரம்பித்தார். அதைப்பற்றி அந்தரங்கமான சிவகிரி வன்னியனர் முதலானவர்கள் பலதடவல் கேட்டும் முகூர்த்த சமயத்திலெல்லாந் தெரியுமென்று கூறிவிட்டார். மணப் பெண்ணுன அவர் மகளுக்கே தன்னை மணக்கப் போகும் புருஷன் இன்னரென்று தெரியாது. அப்பெண்ணை மணக்கபபோகும் பேரதிஷ்டம் வரப்போகிற மணவாளனுக்குந் தெரியாது.

விவாஹத்துக்கு வேண்டியதெல்லாஞ் சித்தமாகி முகூர்த்த காலம் நெருங்கின சமயத்தில் முன்னமே நானிருக்கிறேனென்று கூறிய உக்கிரணி குமாரசுவாமிமுதலியாரை முதலியாரழைத்து மணக்கோலஞ் செய்வித்து தன்னருமை மகளை அவருக்கே கலியாணஞ்செய்துவைத்தார்.

ஆறை அழகப்ப முதலியார் அரும்பெருந்திறலுடன் செருக்கும் பிடிவாதமும் நியாயமுடையவர். அத்

துடன் நட்பையே பெரிதாகப் பாராட்டுங் குணமு டையவராதலால் நியாயத்தைவிட நட்பையே பெரி தெனப் பாராட்டிவந்த குணக்கேடே அவருக்குகூற்று வனுயமைந்தது.

அதென்னவெனில் பாளையக்காரரில் சிவகிரி தவிர மற்றவர்கள் தன்னை வணங்கும்போது சேற்றில் விழுந்து தாங்கள் படுஞ் சிறுமையையும் சிவகிரியார் மட்டும் அஃதில்லாமல் உயர்வாய் வணங்குவதையும் கண்டுபொறாத பாளையகாரர் எல்லாருமொன்றுசேர்ந்து சூழ்ச்சிசெய்து முதலியார் தொலைந்தால்மட்டுந தங்க ளுக்குள்ள அவமானங்கள் நீங்கி தங்கள் மனம்போல நடந்து வாழலாமென்று நம்பிக்கைகொண்டு முதலியா ரிடங் தங்கு தடையின்றிச் செல்லுஞ் சுதந்தரமுடைய சிவகிரி வன்னியனுரை மற்றப் பாளையகாரர்கள் வசப் படுத்தி அதிகார ஸ்தானத்துக்கு விரோதமாக மோசஞ் செய்யுங் கருத்துடனே சமயம் பார்த்துக்கொண்டிருந் தார்கள்.

இப்படியிருக்கும் நாளில் வடகரைப் பாளையககா ரர் சின்னணைஞ்சான்தேவர் கப்பஞ்செலுத்தாதிருந்தார். அதையடக்கவேண்டியதற்காக ஆறை அழகப்ப முதலி யார் பதினேழு பாளையக்காருடைய சைனியங்களுஞ் சேர்த்து கொல்லம் 910-ம் ஆண்டில் புறப்பட்டு வட கரையில் வந்து சேர்ந்து கூடாரமடித்திருந்தார்.

அப்பா லவர்களுக்கும் சின்னணைஞ்சாத்தேவருக் குஞ் சண்டைநேரிட்டு யுத்தஞ்செய்ததில் சின்னணைஞ் சாத்தேவரை யடக்கி ஜெயங்கொண்டு அவரிடம் வாங்க வேண்டிய காணிக்கை கப்பங்களை வாங்கிக்கொண்டார்.

அப்படியிருக்கும்போது ஒருநாள் முதலியார் எண்ணெய்ஸ்நானம் செய்து போஜனம்பண்ணி நித்திரை செய்துகொண்டிருந்தார். அவனை மோசஞ்செய்வதற்கிதுதான் சமயமென பாளையக்காரர் கருதினர்கள். சிவகிரி வன்னியனர் இயற்கையி லீனபுத்தியும் நயவஞ்சகமுமுடையவர். அவர்தான் முதலியாரிடந் தங்குதடையின்றிச் செல்பவரென்று சூழ்ச்சிசெய்து அவரைப் பாளையக்காரர்கள் ஏவினர்கள். அவர் அதற்குடனபட்டுப் புறப்பட்டுக் கூடாரம் நுழைந்து படுக்கையறையுட் சென்று நித்திரைசெய்கிற சமயத்தில், வன்னியனர் ஆறை அழகப்ப முதலியாரைக் குத்திக்கொனறு குடலையெடுத்து செவ்வரிமாலைபோலணிந்துகொண்டு வெளியேசெனறு பாளையக்காரர்களான தன் கூட்டாளிகளுடன் சேர்ந்து மகிழ்ந்திருந்தார்.

இதை உக்கிராணியும் மருமகனுமான குமார சுவாமி முதலியாரறிந்து அப்போது உண்டான ஆருத் துயரங்களையடக்கி, முதலியார் உடம்பு சுகமாயிருக்க வில்லை யெனப் பாவனைபண்ணிப் பல்லக்கிலேற்றி வைத்து சைனியங்களுடன் புறப்பட்டு திருநெல்வேலி அரண்மனைவந்து சேர்ந்து அங்கிருந்து வெகு ஆடம்பரமாகத் தாம்பிரவர்ணி நதிக்கரையில்க் கொண்டுபோய் மாமனுக்குரிய தகனக்கிரியை உஞ்சயனக்கிரியைகளை விதிப்படி முடித்தவுடனே மதுரைக்குப்போய் அரண்மனையில் வாசஞ்செய்த ஆறை அழகப்பமுதலியார் மனைவியிடந்தெரிவித்து நம் குலதர்மப்படி கிரியைகள் நடத்தச்சொன்னதில் அவள் தன் பர்த்தாவைக் கொலை செய்த வன்னியனர் தலையைக்கொய்துவந்து காண்பி

வித்தபின் பாக்கியுள்ள கிரியைகள் நடத்தவேணுமென சபதங்கூறினாள்.

இவைகளைத் தன் பத்தினியும் ஆறை அழகப்ப முதலியார் புத்திரி தீத்தம்மை அண்ணி கேட்டு ஆறாத் துயரங்கொண்டு தன் பர்த்தாவைப்பார்த்து தாங்கள் சிவகிரி வன்னியன் தலையை பழிக்குப் பழிவாங்க வேணுமென்றும் அப்படி முடியாத விஷயத்தில் தங்களுக்குக் கீர்த்தியுண்டாகாதென்றும் வற்புறுத்திச் சொல்ல, குமாரசுவாமி முதலியார் கவலையுந் துயரமுமுண்டாக அதைபடக்கித் தைரியங்கொண்டு அங்கிருந்த பாண்டிய மன்னவனிடம் நடந்த விபரங்களைத் தெரிவித்து அதிகாரத்துக்கு சன்னது வாங்கிக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்குப்போய் அவ்விடமிருந்த கர்த்தாக்களிடந்தெரிவித்து அவர்களிடம் கொல்லம் 914-ளு ஆவணி மீ' 14உ அதிகாரமும் முத்திரைமோதிரமும் வாங்கி அதிகாரஞ் செய்துகொண்டிருக்கும் போது மீனாட்சியம்மாள் அரசியலில் சில கலவரங்களுண்டாகியிருந்தது. அதைச் சீர்திருத்தஞ்செய்யவுந் தன்னுடைய அதிகாரத்துக்கு வேண்டிய உதவிகள் பெறவும் புறப்பட்டு வடக்கே ஆர்க்காடுசென்று நபாபு திருமுன்பு சென்று நடந்த விர்த்தாந்தங்களை பெடுத்துக் கூறி தளவாய் ஆறை அழகப்ப முதலியாருக்குப் புத்திரனில்லாததால் அவர் ஸ்வீகாரபுத்திரியை விவாஹஞ் செய்த மருமகன் எனக்கு அவர் பதவியைக் கொடுக்க வேணுமென்று வேண்டினார்.

அதைக்கேட்ட நபாபு குமாரசுவாமி முதலியார் பேச்சு நயத்தையும் பரபரப்பையு முகச்சோபையையும்

கவனித்து தனக்குள் ஆச்சரியப்பட்டு மகிழ்ந்து வெறுங் கையுடன் வந்திருக்கிறீரே நம்மைக்காணுவதற்கு ஒரு எலுமிச்சம்பழங்கூட அகப்படவில்லையோ வென்று கேட்டார். அதற்கு குமாரசுவாமி முதலியார் நான் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறேன் எனக்கு கொள் கொம்பு போன்றவரைத் திடீரென இழந்து பரம ஏழையா யிருக்கிறேன், என் பிரார்த்தனைக்கிரங்கி அவர் உத்தி யோகத்தி லென்னை நியமித்து அந்தக் கொலைக்காரத் துரோகியை பழிவாங்குஞ் சக்தியை எனக்குத் தாங்கள் அழித்தால் தங்கத்தினாற் செய்த எலுமிச்சம்பழங்களை கூடைகூடையாகக் கொண்டுவந்து தங்களுக்கு காணிக் கை செலுத்துவேனென்று கம்பீரமாகச் சொன்னார்.

ஆஹா! அவ்வளவு சமர்த்தரா நீர் அப்படியானல் அதோ நிற்கிறதே குதிரை அநதக்குதிரையை ஏறிச் சவாரிசெய்யும் பார்ப்போ மென்று நபாபு சொன்னார்.

அவர் காட்டிய குதிரை அதுவரையும் எவரையும் ஏறவிடாத ஒரு துஷ்டமிருகம். ஆயினும் முதலியா ரதையடக்கி ஏறி இருந்து நெடுந்தூரஞ் சவாரிசெய்து வேகமாய் மீண்டுவந்து நபாபின் அரண்மனை வாசலில் நிறுத்திக் கீழே குதித்துப்போய் நபாபைச் சலாஞ்செய் தார். இவரிறங்கியவுடன் அக்குதிரை விழுந்திறந்தது. அவர் சாமர்த்தியத்தைக் கண்ட நபாபு சந்தோஷம் அடைந்து சபாஸ்! அச்சா! உம்மைத் திருநெல்வேலி சீமைக்குத் தளவாயாக்கி வைத்திருக்கிறோம். நீர்போய் வேலைபார்க்கலாமென்று ஆக்ஞாபித்தார்.

குமாரசுவாமி முதலியார் நபாபின் சன்னதைப் பெற்று சில பரிவாரங்களையுந் திரட்டிக்கொண்டு மஹா

ராட்டிர தேசம்போய் பத்தைய சிங்குவினிடந் தெரி
வித்து அவர்களுதவியையும் பெற்று ஆறுமாசம் அங்
கிருந்து அப்பால் மூவாயிரங் குதிரைகளையும் மஹாரா
ஷட்டிரவீரர்களான இறுதையர்களையுஞ் சேகரித்து
அந்த சேனைகளுடனே மைசூர் சென்று அங்கிருந்த
கர்த்தாக்களிடந்தான் முந்தின அதிகாரஸ்தரான அரிய
நாயக முதலியார் வம்சத்தைச் சேர்ந்தவரென்றும், அப்
பால் மாவைக் குமாரசுவாமி முதலியார் அவர் மரு
மகன் தளவாய் ஆறை அழகப்ப முதலியார் இவர்கள்
வாரீஸ் தாரனென்றும், அந்த அதிகார பாத்தியதையை
வாரீஸ் பாத்தியமாக தனக்கே கொடுக்கவேணுமென்
றும், அதிகாரஸ்தர் ஆறை அழகப்ப முதலியாரை
அபாயமாக் கொலை செய்த சிவகிரி வன்னியனுருக்குத்
தக்க தண்டனை விதிப்பதற்கு தனக்கதிகாரங் கொடுக்
கவேணுமென்று தெரிவித்து, அந்தப்படிக்குத்தாவுந்
தளவாய்ப்பட்டமு முத்திரை மோதிரமும் வாங்கிக்
கொண்டு, சேனைகளுடன் புறப்பட்டு சென்னப்பட்
டணம்வந்து அங்குள்ள பாண்டிய நாட்டின் கலவ
ரைச் சீர்திருத்தங்கள் செய்து முடித்துக்கொண்டு
பரிவாரங்களுஞ் சேனைகளும் கூடப்புறப்பட்டு மதுரை
வந்துசேர்ந்து மீனாட்சியம்மாளரசியலில் மாமூல் வழக்
கப்படி அரசுபுரியும் ஸ்வாதீனங்கள் செய்துவைத்து
அப்பால் அனுமதியும் உத்தாவும்பெற்று திருநெல்
வேலி நோக்கித் திரும்பி வருகிற வழியிலே சிவகிரி
சென்று தன் மாமனை வஞ்சித்துக் கொன்றவன்னிய
னுரைக் கூப்பிட்டுவிட்டார். அதற்கு அவர் தளவாயா
கிவிட்டதை யறிந்த வன்னியனுர் பயப்பட்டு ஒளித்
துக்கொண்டு வயது வடிவுசாயலெல்லாந் தன்னையே

போன்றுள்ள வேறொருவனை முதலியாரிடம் அனுப்பி னூர். சிவகிரி வன்னியனுருக்கு வலது கன்னத்திலொரு கறுப்பு மச்சமுண்டென்பது முதலியாருக்குத் தெரி யும். நான் தானென்று வந்துநின்றபோலி வன்னியனு ருக்கோ அஃதில்லை. இதைத் தெரிந்துகொண்டு முதலி யார் உண்மையைத் துலக்கவெண்ணி வன்னியனுரைப் போல வந்தவனைச் சித்திரவதைக் குள்ளாக்கவே அவ னுண்மையை ஒப்புக்கொண்டதுமன்றி அசல் வன் னியனூர் விநாயகர்கோவிலில் விநாயகருக்குப் பின் புறமொளித்துக் கொண்டிருப்பதையுங் கூறினுன். உடனே நான்கு கிங்கரர்கள்போய் இழுத்துக்கொண்டு வந்து நிறுத்த, தளவாய் குமாரசுவாமி முதலியார் வேங்கைமுன் ஆடுபோல நடுநடுங்கி நின்ற அந்தக் கொலைபாதகன் முகத்தில் காறியுமிழ்ந்து உன் முகத் தில் விழிப்பது பாவம். அவ்வளவு கொடிய துரோகி நீ.

எந்நன்றி கொன்றூர்க்கு முய்வுண்டாம் உய்வில்லை
செயந்நன்றிகொன்ற மகற்கு.

என்னும் பெரியோர் வாக்கை நீயறியாய் போ லும், ஒரு மிருகத்தை வேட்டையாடுவது போல உன்னையுங் கொல்வது தகுமெனினும் நானப்படிச் செய்ய விரும்பவில்லை. கடவுள் சாக்ஷியாகவே உன் பேரிலுள்ள க்ஷாத்திரத்தைத் தீர்க்க விரும்புகிறேன். நீ நால்வருடன் நாளை மாலை யிந்நேரம் வரவேண்டும் நானும் நால்வருடன் அப்படியே தயாராயிருப்பேன். நீங்கள் ஐவரும் நாங்கள் ஐவரும் சண்டைசெய்வோம் கடவுளே நியாய அநியாயத்தைத் துலக்கட்டுமென்று கூறினூர்.

அவ்வாறே மறுநாள் மாலே பழிப்போர் நடந்தது. குமாரசுவாமி முதலியார் பக்கத்தில் அவருக்குதவியாக பொருத நால்வர் சாடார்குலத்தைச் சேர்ந்த புகல் மாடக்கண்ணு சேர்வை 1. 2. அவன் தம்பி மேய்மாடக்கண்ணு சேர்வை. 3. புறங்காட்டாப்புலி சேர்வை. 4. சூக்ஷமுடையான் சேர்வை நால்வரும் சிவகிரி வர குணவன்னியனூர் தேகபலத்திலும், போர்த்திறமையிலும் மிகச்சிறந்தவர். அவருடன் வந்த நால்வரும் அவ்வண்ணம் பேர்போனவரே. ஆயினும் மென் குற்றமுள்ள நெஞ்சொன்றே அவர் பலத்தையும் திறனேயும் பாழாக்கப் போதுமன்றோ. நெடுநேரம் நிகழ்ந்த பழிப்போரில் ஒருகால் முதலியாரின் தலேயை வன்னியனூர் வீசிவிடுந் தறுவாயில் பேய்மாடன் சேர்வைகாரன் குறுக்கிட்டுக் காப்பாற்றினுன். முடிவில் முதலியாரின் வாளுக்கே வன்னியனூர் இரையாகி மடிந்தார். சண்டையும அஃதோடு நின்றது. தனக்கு ஆபத்திலே உதவிசெய்த நால்வர்களுக்கும் தளவாய் குமாரசுவாமி முதலியார் தக்கபடி சன்மானம் அளித்து மரியாதை செய்தார்.

வன்னியனூர் தலேயைத் திருநெல்வேலிக் கடையில்க் காண்பித்து கடைக்கொரு காசுவீதம் வாங்கும்படி செய்தார்.

அப்பால் தளவாய் குமாரசுவாமி முதலியார் மதுரைக்குச் சென்று தன் மாமி தன் பத்தினியிடம் நடந்த விபரங்களேச் சொல்லிபின் தன் மாமனூர் ஆறை அழகப்ப முதலியாருக்குச் செய்யவேண்டிய அமரக்கிரிகைகளேயும் வருஷாப்தீக முதலான விசேடங்களேயும் நடப்

விவித்தபின் தன்னுடைய அதிகாரத்தை நீதியோடு நடத்தி தர்மங்களை தாம் வழுவாது செய்துவந்தார்.

கவி

நிலைகொண்ட கீர்த்தி அழகப்பராயன் தன்னித்
திரையில்
கொலைகொண்ட பாதகன் தென்மலை வன்னியன்
கோட்டைதனில்
அலைவந்து மோதி இராவணன் சேனை யழிந்தது
போல்
தலைகொண்டு வந்தான குமாரசுவாமி தளச்சிங்கமே.

அநுபந்தம் 1

*Shungoony Menon—History of Travancore*

**Appeal for help to the NAYAKAS of Madura, whose Headquarters were at that time in Trichinopoly. A Rival embassy to Trichinopoly.**

The feudatory chiefs and nobles, after the withdrawal of the Trichinopoly contingent force, began to rebel again, and as they had always being striving to get their independence, they combined and formed a confederacy as before, and were joined by the two sons of the late sovereign (Rama Varma Rajah), known by the names of

Kunju Thambies *alias* Papu Thamby and Raman Thamby, who held high rank among the nobles during the lifetime of their father Marthanda Vurma Kulasekhara Perumal Raja and were in affluent circumstances. But they were now reduced to the level of the ordinary nobles of the country and they felt their degradation keenly. The confederates sympathised with them, and considering them proper instruments for overthrowing the royal authority, they persuaded them to claim their father's throne; and one of them (Papu Thamby) being furnished with sufficient means, proceeded to Trichinopoly in 905 M. E. (1730 A. D.), and represented to the Pandyan Governor, his imaginary grievances, saying that great injustice was done to him by the kingdom being forcibly usurped by Marthanda Vurmah. He entered into certain terms with that chief to put him in possession of the kingdom. The Governor, annoyed by the refusal of payment of the peishkush and the dismissal of the contingent forces by Marthanda Vurmah Maha Rajah, readily listened to Papu Thamby's false representations.

"The Governor ordered one of his agents Alagappa Moodelliar to proceed with a sufficient number of men and horses to Travancore, and institute enquiries into the claims of Papu Thamby, giving him authority to enforce the same if found valid.

"The Moodelliar set out from Trichinopoly, accompanied by Papu Thamby and arrived at Udayagherry, where he commenced to institute the enquiry into the claims of the Thamby. The Maha Rajah, on learning this, deputed the State Secretary, Rama Iyen and his assistant Narayana Iyen to the Moodelliar, and they were furnished with valid documents to prove the absurdity and fictitious character of Papu Thamby's claims.

"While Papu Thamby was utterly unable to produce any documentary evidence in support of his pretended rights, Rama Iyen fully proved the claims of the Maha Rajah to his uncle's throne. The Moodelliar was very indignant with Papu Thamby, and his false complaint was at once rejected. He was told that he should be loyal and obedient to his king in accordance with the customs of the country.

"The Maha Rajah informed the Moodelliar of the renewed outbreak of a rebellious spirit among his chiefs, and asked him to place one half of his force at His Highness' disposal. The Moodelliar complied with this request and returned to Trichinopoly loaded with presents.

*Bishop Caldwell—History of Tinnevelly, p. 254*

---

அநுபந்தம் 2

*Nagamiah—Travanccre Manual*

**The Tampi Insurrection** 905 M. E. (1730 A. D.)

The late Maharajah Rama Varma Rajah had left two sons as Kunju 'Tampis' *alias* Papu Tampi and Raman Tampi. Taking advantage of the disorganised state of country and at the instigation of the wicked insurgents, the Ettuveettu Pillamars or heads of eight houses, the Madampimars (petty chiefs) and the Yogakkars secretly repaired to Trichinopoly in 1729 A. D. with a view to secure the help of the Pandian Governor there in order to defy the authority of the young Rajah. On their arrival at Trichinopoly they were welcomed by the Governor with all honours

due on to the sons of the Maharaja. They told him that Marthanda Varma Kulasekhara Perumal Raja, the young king of Travancore, was a usurper, that he had no respect for Pandian chief and that the dismissal of the contingent and non paymen of the tribute were only preliminaries to an invation of the Pandian Kingdom itself. They further told him that as sons of late Maharaja, they were, according to the principles of natural justice, the proper heirs to their father's throne, and that the new tyrant besides dispossessing them of his right, had even denied them to have means of a decent living.

The Governor who was already exasperated against the Maharajah for his having disbanded the Trichinopoly contingent espoused their cause with avidity and deputed one of his officers, Alagappa Mudaliar by name, with a small force to enquire into the claims of the rival parties and to install Papu Tampi, the elder son on his fathers throne. Papu Thamby was much gratified and in return promised to bear all the expenses of the undertaking and to pay a large tribute when he was

placed on the throne. For a time everything seemed bright and prosperous to the Tamby's dream. The army arrived at Udagagri and encamped at Puliakurichy. The Mudaliar called upon the Maharajah to explain his conduct. Palace Rayasom Rama Iyen and Narayana Iyen were thereupon deputed to negotiate with the Mudaliar and acquaint him with the law of inheritance obtaining on this coast. They discussed the question as instructed and convinced the Mudaliar that in the Royal Family of Travancore, succession to the throne was in the female line, that the nephews inherit the uncle's property, that the kings marry from families inferior to themselves in point of caste, that the sons begotten of such union have therefore no title of succession to the throne and that a liberal provision is always made from the state funds for their maintenance in comfort and dignity. The Mudaliar having heard them and satisfied himself from independent enquiries dismissed the claims of the Tampis as utterly false, reprimanded them severely for their conduct and advised them to be loyal and faithful to their father's nephew and their own right-

ful Sovereign. The Maharajah sent suitable presents to the Mudaliar who at once left the country quite pleased leaving behind him half of his force to help the Maharajah against his refractory subjects. The Maharajah, however, still apprehendhd fresh outbreaks from the disloyal Tampi and their wicked confederates and therefore organised several new regiments of Maravas equipped with fire-arms and constructed forts at all important strategetic points. The just decision of the Mudaliar, the retention of a portion of the Trichinopoly force, the new fortifications, the raising of the additional regiments and the mobilisation of the forces throughout the country struck awe into the hearts of the rebellious Tampis and the confederate chieftain's and secured peace to the Maharaja and his subjects. For a long time thereafter, the insurgents did not make any attempts to recover their lost ground.



THE PALAMCOTTAH PRINTING PRESS—1926

## அநுபந்தம். 3.

### தெக்ஷிண சீமை: திருநெல்வேலி அதிகாரம்.

| | | |
|---|---|---|
| மப்பேடு அரியநாயக முதலியார் | ... | 1559—1600 |
| வடமலையப்ப பிள்ளையன் | ... | 1674—1688 |
| மாவை குமாரசுவாமிமுதலியார் | ... | 1688—1700 |
| ஆறை அழகப்ப முதலியார் | ... | 1700—1724 |
| சுந்தரதோழ பிள்ளை தம்பாபிள்ளை | ... | 17 4—1728 |
| ஆறை அழகப்ப முதலியார், சங்கரமூர்த்தியா பிள்ளை | ... | 1728—1734 |
| ஆறை அழகப்ப முதலியார் | ... | 1734—1735 |
| புத்த சாய்பு | ... | 1739 |
| தளவாய் குமாரசுவாமி முதலியார், (மதுரை தளகர்த்தர்) | ... | 1740 |
| அப்பாஜி நாயக்கர் | ... | 1741 |
| தளவாய் குமாரசுவாமி முதலியார் | ... | 1712—1743 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | ரெவினியூ வசூல் | | |
| | | | Star Pagoda | பணம் | காசு |
| அனிவர்கான் | ... | 1744 | | | |
| மீர்குலாம் குஸைடன் | ... | 1745—47 | | | |
| குலையன் மகம்மதுகான் | ... | 1748—50 | | | |
| ஆலம்கான் | ... | 1751 | | | |
| தளவாய் தித்தாரப்ப முதலியார் | ... | 1752 | 4,01,617 | 16 | 70 |
| மீயர் | ... | 1753—54 | | | |
| மாபூஸ்கான் | ... | 1755 | | | |
| தளவாய் அழகப்ப முதலியார் | ... | 1756 | 3,85,112 | 28 | 77 |
| மகம்மது இஸ்புகான் | ... | 1757 } 1760—63 } | | | |
| இராஜா ஹாக்மிட்ராம் | ... | 1764—69 | | | |
| ஷேக் மகம்மது (ஆறு மாசம்) | ... | 1770 | | | |
| சையது மகம்மதுகான் | ... | 1771—75 | | | |
| மகம்மது எட்டபர்கான் | ... | 1776—77 | | | |
| தளவாய் திருமலையப்ப முதலியார் | ... | 1778 | 5,60,3 0 | 20 | 26 |
| அல்லிசவாஸ்கான் | ... | 1779 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தளவாய் திருமலையப்ப முதலியார் | ... | 1780 | 2,44,761 | 26 | 17 |
| ஷை | ... | 1781 | 2,16,610 | 18 | 40 |
| ஷை | ... | 1782 | 3,16,348 | 25 | 39 |
| இர்வின் | ... | 1783—4 | | | |
| மகம்மது எட்டபர்கான் | ... | 1785—9 | | | |
| பெஞ்சமின் டோரின் | ... | 1790—1 | | | |
| மகம்மது எட்டபர்கான் | ... | 1792—5 | | | |
| தளவாய் இராமசுவாமி முதலியார் | ... | 1796 | 4,35,498 | 28 | 7 |
| குப்பனையங்கார் | ... | 1797 | | | |
| மகம்மது ஜாபர்கான் | ... | 1798—9 | | | |
| 7 மிட்டாதார்கள் | ... | 1800 | | | |
| S. R. லுஷிங்டன் | ... | 31—7—1801 | 5,11,027 | 36 | 73 |

= Rs. 20,06,603.